[22nd September 1958

*Drinking water wells*

*408 *Q.*—SRI P. S. SANTHANAM : கனம் ரெவினியு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

வட ஆற்காடு ஜில்லா, திருவண்ணமலை தாலுகாவைச் சேர்ந்த கீழ்க்கண்ட கிராமங்களுக்கு குடி தண்ணீர்க் கிணறுகள் ஏற்படுத்த இது வரையிலும் அரசாங்கத்தார் எடுத்துக்கொண்ட நடவடிக்கைகள் யாவை ?

வெறையூர் பிர்க்கா—

(1) வன்னியநகரம்.

(2) சு. வாளவெட்டி.

(3) கல்லேரி.

(4) தண்டரை.

(5) வேட்டவலம் ஒட்ட தெரு.

செங்கம் தாலுகா, கண்டாரம்பட்டு பிர்க்கா—

(1) கீழ்வணக்கம்பாடி ஹரிஜன் காலனி.

(2) எடத்தனூர் ஹரிஜன காலனி.

திருவண்ணமலை டவுன் பிர்க்கா—

(1) கீழ்னத்தூர் ஹரிஜன் காலனி.

THE HON. SRI M. A. MANICKAVELU : Well works have been completed in Vannia Nagaram and Vettavalam Ottatheru. They are in progress in Kalleri, Thandarai and Keelavanakkampadi Harijan Colony. A well work will be taken up shortly in S. Valavetti. There are already wells in the Edathanur and Kilnattur Harijan Colonies.

*Harijan agriculturists*

*409 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) ஹரிஜன விவசாயிகளுக்கு உழவுமாடுகள், விவசாயிக் கருவிகள், விதைகள் முதலியன இலவசமாக வாங்கத் தொகை கொடுக்கப்படுவதற்கு 1957-58-ஆம் ஆண்டிலே ஒதுக்கப்பட்ட தொகையிலிருந்து ஒவ்வொரு ஜில்லாவுக்கும் பகிர்ந்தளிக்கப்பட்ட தொகை எவ்வளவு ?

(ஆ) எந்தெந்த ஜில்லாக்களிலே எவ்வளவு தொகை செலவு செய்யப்படாமல் கவர்மெண்டுக்கே திருப்பி அனுப்பப்பட்டது ?

THE HON. SRI P. KAKKAN : (*a*) & (*b*) A statement[a] is placed on the table of the House.

SRI P. G. MANICKAM : ஹரிஜன விவசாயிகள், தங்கள் சொந்தப் பணத்திலே உழவு மாடுகள் வாங்கிக்கொண்டு வந்து அதிகாரி களிடம் காட்டிய பிறகு மேற்படி தொகை அவர்களுக்கு சாங்ஷன் செய்யப்படுவதாகத் தெரிகிறது. அவ்வாறு ஹரிஜனங்கள் தங்கள் சொந்தப் பணத்திலிருந்து வாங்கக்கூடிய நிலையில் இல்லாததால் சம்பந்தப்பட்ட அதிகாரிகள் மூலமாக மாடுகள் வாங்கிக் கொடுப்பதற்கு அரசாங்கம் ஏற்பாடு செய்யுமா ?

THE HON. SRI P. KAKKAN : ஹரிஜனங்கள் தங்கள் சொந்தப் பணத்திலிருந்து மாடுகள் வாங்கக்கூடாது. அப்படி வாங்கினால் தவறுகள் ஏற்படுகின்றன. ஆகவே, மாடு வாங்குவதற்காக திருவுளச் சீட்டுப் போட்டு யாருக்கு விழுகிறதோ அவரும், அதிகாரியும் சேர்ந்து போய் மாடு வாங்கவேண்டும் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

[a] Printed as Appendix IV on page 488 infra.

22nd September 1958]

SRI V. K. RAMASWAMY MUDALIYAR: In a colony consisting of 1,000 people or so, if one pair of bullocks is given to a single individual, the others get disappointed. So, instead of this practice, will the Government consider the desirability of distributing the amounts to all for improving their housing conditions and other things?

THE HON. SRI P. KAKKAN: காலனியைப் பார்த்து மாடுகள் கொடுக்கப்படுவது இல்லை. காலனியில் இருக்கிற ஹரிஜனங்கள் ½ ஏக்கருக்கு மேல் 2 ஏக்கர் வரையிலும் அதற்கு மேலும் வைத்திருக்கிறார்களா என்பதைப் பார்த்துத் தான் கொடுக்கப்படுகிறது.

*Orphanages*

* 410 *Q*.—SRI A. VEDARATHNAM: கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

அனாதை மாணவர்களுக்கென்று தனியே போர்டிங் கிராண்ட் கொடுக்கக் காரணமென்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM: A separate boarding grant is paid to feed the poor destitute children and orphans who reside in orphanages aided by the Education Department and are reading in recognised schools with a view to encourage the education of those children.

SRI A. VEDARATHNAM: ஹரிஜன இலாக்கா இதே போர்டிங் கிராண்டு கொடுத்து பல ஹாஸ்டல்கள் நடத்திவரும்பொழுது, இந்த அனாதைப் பிள்ளைகளுக்கு மாத்திரம் ஏன் கல்வி இலாக்கா கிராண்ட் கொடுக்கவேண்டும் ? இரண்டையும் இணைத்துவிடக் கூடாதா ? அப்படிச் செய்தால் செலவில் சிக்கனம் ஏற்படுமே. ஆகவே இதைப்பற்றி அரசாங்கம் யோசிக்குமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM: ஹரிஜனங்களுக்கு என்று தனியாக சலுகைகள் இருக்கின்றன. அதற்கான செலவு விகிதமும் வேறு முறையில் அமைக்கப்பட்டிருக்கிறது. இரண்டையும் சேர்த்து நடத்துவது என்பது கஷ்டமாக இருக்கும்.

SRI M. S. SELVARAJAN: அனாதை மாணவர்கள் விடுதிகளுக்கு பணம் பெறுவதற்கு சம்பந்தப்பட்ட மாணவர்கள் பிறந்த வட்டாரத்திலுள்ள ரெவின்யூ அதிகாரிகளிடமிருந்து சர்டிபிகேட் வாங்கிக்கொண்டு வருவதில் உள்ள கஷ்டங்கள் அரசாங்கத்தின் கவனத்திற்கு கொண்டு வரப்பட்டிருக்கிறதா? அதற்குரிய பரிகாரம் என்ன?

THE HON. SRI C. SUBRAMANIAM: அதில் சில கஷ்டங்கள் இருக்கின்றன. சரியான சர்டிபிகேட் இல்லாமல் இந்த உதவி அளித்தால், இந்த உதவி பெறுவதற்கு தகுதியில்லாதவர்கள் இந்த உதவியைப் பெறக்கூடிய நிலைமை ஏற்பட்டுவிடும். ஆகையினால் நாம் சிறு கஷ்டங்களைப் பொறுத்துக்கொள்ள வேண்டியதுதான்.

SRI A. GOVINDASAMY: தென் ஆற்காடு மாவட்டத்தில் கடலூர் பகுதியிலே நடைபெறும் சேவா சமாஜத்திற்கு சர்க்கார் எவ்வளவு மான்யம் கொடுக்கிறது? அந்தக் குழந்தைகளுக்கு என்ன வசதிகள் செய்யப்பட்டு வருகின்றன ?

THE HON. SRI C. SUBRAMANIAM: The hon. Member may put a separate question.